மண் மேற்பரப்பில் ஏற்படும் சேதம் காரணமாக மணிகளுக்கிடையே உள்ள பரப்பிழுவை விசை குறைகின்றது. இது மண்சரிவு ஏற்படும் சாத்தியக்கூறையும் வியக்கத்தக்க விதத்தில் அதிகரிக்கச் செய்யலாம்.

(a) மண்ணினதும் மணலினதும் உறுதிப்பாட்டின் சில அம்சங்களை விளக்குவதற்குப் பயன்படுத்தப்படத்தக்க **மூன்று** அடிப்படைப் பௌதிக எண்ணக்கருக்களைக் குறிப்பிடுக.

(b) மண்ணின் **மூன்று** பிரதான கனிப்பொருள் கூறுகளை எழுதுக.

(c) ஒரு வீதி அமைப்பில் சரிவின் ஒரு குறித்த பிரிவிலிருந்து மண் அகற்றப்பட்டமையால் உரு (3) இல் காட்டப்பட்டுள்ளவாறு இயற்கைச் சரிவு மாறியுள்ளது. இது மண்சரிவுகள் உண்டாகிப் பாதிப்பை ஏற்படுத்தத்தக்க இடமாகும். உரைப்பகுதியில் தரப்பட்டுள்ள தகவல்களைப் பயன்படுத்தி இதனை விளக்குக.



உரு (3)

(d) உலர் மணலுடன் நீரைச் சேர்க்கும்போது மணலின் உறுதிப்பாடு வியக்கத்தக்க விதத்தில் அதிகரிக்கின்றது. இதற்குரிய முக்கிய காரணத்தை விளக்குக.

(e) உரு (4) இல் இரு கோள மணல் மணிகளுக்கிடையே உள்ள ஒரு நீர்ப் பாலம் காட்டப்பட்டுள்ளது. உரு (4) ஐ உமது விடைத்தாளில் பிரதிசெய்து, பரப்பிழுவை காரணமாக **ஒவ்வொரு** மணி மீதும் உள்ள விளையுள் மறுதாக்க விசைகளை (அம்புக்குறிகளைப் பயன்படுத்தி) வரைக.

(f) மேல், கீழ்ப் பிறையுருக்களின் வளைவாரைகள் முறையே $r_1$, $r_2$ ஆகவுள்ள, உரு 1 (b) இற் காட்டப்பட்டுள்ள இரு மணல் மணிகளினால் உண்டாக்கப்படும் ஒரு நீர்ப் பாலத்தைக் கருதுக. மேல், கீழ் வளி-நீர் இடைமுகங்களுக்குக் குறுக்கே உள்ள அமுக்க வித்தியாசங்களுக்குரிய கோவைகளைப் பயன்படுத்தி, உரு 1 (b) இல் உள்ள நீர் நிரலின் உயரம் $h$ இற்கு ஒரு கோவையைப் பெறுக. பரப்பிழுவை, நீரின் அடர்த்தி ஆகியன முறையே $T$, $d$ என எடுக்க. அவ்வுருவில் காட்டப்பட்டிருக்கும் $A$, $B$ ஆகிய புள்ளிகளில் உள்ள அமுக்கங்கள் சமம் எனக் கொள்க.



உரு (4)

(g) மேலே (f) இல் குறிப்பிடப்பட்டுள்ள நிலைமைக்கு உயரம் $h$ ஐக் கணிக்க. $r_1 = 0.8$ mm, $r_2 = 1.0$ mm, $T = 7.2 \times 10^{-2}$ N m$^{-1}$, $d = 1.0 \times 10^3$ kg m$^{-3}$ என எடுக்க.

(h) $A$, $B$ ஆகிய புள்ளிகளில் உள்ள அமுக்கங்கள் உரு 1 (b) இற் காட்டப்பட்டுள்ள நிலைமையிலும் உயர்வாக இருக்கும் ஒரு நிலைமையைக் கருதுக. இரு பிறையுருக்கள் உட்பட உரு 1(b) ஐ உமது விடைத்தாளில் பிரதிசெய்து, இரு புதிய பிறையுருக்களினதும் வடிவங்களை வரைந்து, அவற்றை $X$, $Y$ எனத் தெளிவாகப் பெயரிடுக.

(i) உரு 1(b) இற் காட்டப்பட்டுள்ள $A$, $B$ ஆகிய புள்ளிகளில் உள்ள அமுக்கங்கள் தொடர்ச்சியாக அதிகரிப்பின், மணிகளுக்கிடையே உள்ள பரப்பிழுவை விசைகளின் விளைவாகப் பிறையுருக்களின் ஆரைகளுக்கும் தொடுகைக் கோணத்திற்கும் விளையுள் மறுதாக்க விசைகளுக்கும் என்ன நடைபெறும் ? உமது விடையை விளக்குக.

(j) உரைப்பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ள, மண்சரிவுகள் ஏற்படத்தக்க சாத்தியக்கூறை அதிகரிக்கச்செய்யும் **இரு** மனிதச் செயற்பாடுகளை எழுதுக.

(a) புவியீர்ப்பு, உராய்வு, பரப்பிழுவை (**மூன்றும்** சரியாயின்) ........................(01)

(b) களிமண், வண்டல், மணல் (**மூன்றும்** சரியாயின்)........................(01)

(c) சரிவின் கோணமானது, α / படுக்கைக் கோணம் / ஒரு குறித்த பதார்த்தம் உண்டாக்கத்தக்க மிகவும் உறுதியான அதிசாய்வுள்ள சரிவு ஐ விட பெரியது

பெரிய கோணம் அதிசாய்வு உறுதியான தன்மை ........................(01)

(d) மணிகளுக்கிடையே உள்ள மயிர்த்துளை விசைகள் / பரப்பிழுவை விசைகள் / ஒட்டற்பண்பு விசைகள் காரணமாக உறுதிப்பாடு உயர்த்தப்படும்.

........................(01)



Download Marking Schemes at : www.freebooks.lk

(e)




வலது பக்கத்து மணியில் இடதுபுறமாக உள்ள அம்பு **உருவில் சரியாகக் காட்டப்பட்டுள்ளவாறு** ..............................(01)

இடது பக்கத்து மணியில் வலதுபுறமாக உள்ள அம்பு **உருவில் சரியாகக் காட்டப்பட்டுள்ளவாறு** ..............................(01)

**அல்லது**




இடதுபக்க, வலதுபக்க மணிகளுக்கிடையே மேலுள்ள இரு அம்புகள் **உருவில் சரியாகக் காட்டப்பட்டுள்ளவாறு** ..............................(01)

இடதுபக்க, வலதுபக்க மணிகளுக்கிடையே கீழே உள்ள இரு அம்புகள் **உருவில் சரியாகக் காட்டப்பட்டுள்ளவாறு** ..............................(01)

(f)




$$P_A - P_C = \frac{2T}{r_1} - - - (X)$$
$$P_B - P_D = \frac{2T}{r_2} - - - (Y)$$
(X) or (Y) ..............(01)

$$P_D = P_C + hdg$$ ..............................(01)

$$(X) - (Y) \quad \rightarrow \quad P_D - P_C = \frac{2T}{r_1} - \frac{2T}{r_2}$$

$$h = \frac{2T}{dg}\left(\frac{1}{r_1} - \frac{1}{r_2}\right)$$ ..............(01)

(g) $h = \frac{2\times7.2\times10^{-2}}{10^3\times10}\left(\frac{1}{0.8\times10^{-3}} - \frac{1}{1.0\times10^{-3}}\right)$ (சரியான பிரதியீட்டிற்கு)..........(01)

$$h = 14.4 \times 10^{-3}\left(\frac{1-0.8}{0.8}\right)$$

$$h = 3.6 \times 10^{-3}\text{m}$$ ..............................(01)

(h)




(காட்டப்பட்டுள்ளவாறு X **அல்லது** Y பிறையுருக்களுக்கு)..........(01)

(உரு 1(b) இல் காட்டப்பட்டிருக்கும் பிறையுருக்கு **ஒப்பீடு இல்லை எனின்** இப்புள்ளியை வழங்க **வேண்டாம்**)



Download Marking Schemes at : www.freebooks.lk

(i)

- பிறையுருக்களின் ஆரைகள் மணிகளுக்கிடையேயான வெறுமையின் ஆரைக்கு சமனாக வரும்வரை பிறையுருக்களின் ஆரைகள் குறையும்.
- தொடுகைக் கோணம் பூச்சியத்திற்குக் குறையும்.
- விளையுள் மறுதாக்க விசை பூச்சியத்திற்குக் குறையும்.

(**மூன்றும்** சரியாயின்)........................................(02)

(ஏதாவது **இரண்டு** சரியாயின்)........................................(01)

(j) ஒருசரிவின் அடியிலிருந்து மண்ணை அகற்றுதல்.
பீடைகொள்ளிகளை / களைக்கொள்ளிகள் / வளமாக்கிகள் மண்ணுடன் சேர்க்கப்படும்போது.
முறைமையான பரிசீலனை இல்லாமல் மலைப் பிரதேசங்களில் வீதி அமைப்புகள் போன்ற உட்கட்டுமான அபிவிருத்திகள் மேற்கொள்ளும்போது

(ஏதாவது **இரண்டு** சரியாயின்)........................................(01)

**மொத்தம்: 15 புள்ளிகள்**




. எமது வெள்ளுடுத்தொகுதியாகிய பால் வீதியில் உள்ள ஏனைய கோள் தொகுதிகளில் மக்கள் வாழத்தக்க கோள்களைக் காண்பதே நாசா (NASA) இன் கெப்ளர் ஆய்வுப்பயணத்தின் பிரதான குறிக்கோளாகும். உடுக்களைச் சுற்றியுள்ள மண்டிலத்திற் செல்லும் பல கோள்கள் இந்த ஆய்வுப்பயணத்தில் கண்டறியப்பட்டுள்ளன. அத்தகைய் ஓர் அவதானிப்பு, முறையே $T_A = 300$ புவி நாட்கள், $T_B = 50$ புவி நாட்கள் என்னும் மண்டிலக் காலங்களை உடைய கோள் $A$, கோள் $B$ என்னும் இரு கோள்களைக் கொண்ட ஒரு கோள் தொகுதியாகும். அக்கோள்கள் சீரான கோளங்களாகும் எனவும் அவை உருவிற் காட்டப்பட்டுள்ளவாறு திணிவு $M$ ஐ உடைய ஓர் உடு $S$ ஐச் சுற்றி உள்ள வட்ட மண்டிலங்களில் இயங்குகின்றன எனவும் கொள்க. கோள்களுக்கிடையே உள்ள இடைத்தாக்கத்தைப் புறக்கணிக்க.

(a) (i) கோள் $B$ இன் மண்டிலக் கதி $(v_B)$ இற்குரிய ஒரு கோவையை $M$, கோள் $B$ இன் மண்டில ஆரை $R_B$, அகில ஈர்ப்பு மாறிலி $G$ ஆகியவற்றின் சார்பிற் பெறுக.

(ii) கோள் $B$ இன் காலம் $T_B$ இற்குரிய ஒரு கோவையை $R_B$, $v_B$ ஆகியவற்றின் சார்பில் எழுதுக.

(iii) மையத்தில் உள்ள உடுவின் திணிவு $M$ இற்குரிய ஒரு கோவையை $T_B$, $R_B$, $G$ ஆகியவற்றின் சார்பிற் பெறுக.

(iv) $R_B = 0.3$ AU (1 AU $= 1.5 \times 10^{11}$ m) எனின், உடுவின் திணிவு $M$ ஐக் கணிக்க. $G = 6.7 \times 10^{-11}\ \text{m}^3\ \text{kg}^{-1}\ \text{s}^{-2}$ எனவும் $\pi^2 = 10$ எனவும் எடுத்துக்கொள்க.

(b) (i) மேலே (a) (iii) இற் பெற்ற கோவையைப் பயன்படுத்தி $A$, $B$ ஆகிய கோள்களின் மண்டில ஆரைகள் $R_A$, $R_B$, காலங்கள் $T_A$, $T_B$ ஆகியவற்றைத் தொடர்புபடுத்தும் ஒரு கோவையைப் பெறுக.

01) (ii) தரப்பட்டுள்ள பெறுமானங்களைப் பயன்படுத்திக் கோள் $A$ இன் மண்டில ஆரை $R_A$ ஐக் கணிக்க.

(c) புறக் கோள் $A$ இன் திணிவும் ஆரையும் முறையே $23\,m_E$, $4.6\,r_E$ எனக் காணப்பட்டுள்ளது; இங்கு $m_E$, $r_E$ ஆகியன முறையே புவியின் திணிவும் ஆரையும் ஆகும்.

(i) கோள் $A$ இன் மேற்பரப்பு மீது உள்ள ஒரு புள்ளியில் ஈர்ப்பு ஆர்முடுகல் $g_A$ இற்குரிய ஒரு கோவையை $m_E$, $r_E$, $G$ ஆகியவற்றின் சார்பிற் பெறுக.

(01) (ii) $g_A$ இற்குரிய ஒரு கோவையைப் புவியின் மேற்பரப்பில் ஒரு புள்ளி மீது உள்ள ஈர்ப்பு ஆர்முடுகல் $g_E$ இன் சார்பிற் பெறுக.

(iii) 100 kg திணிவுள்ள ஒரு விண்வெளி இறங்கும் தொகுதி (space landing module) கோள் $A$ மீது இறங்கினால், இறங்கிய பின்னர் இறங்கும் தொகுதியின் நிறையைக் கணிக்க.

(iv) எமது ஞாயிற்றுத் தொகுதியுடன் ஒப்பிடும்போது புறக் கோள் $A$ ஆனது மக்கள் வாழத்தக்க வலயத்தினுள்ளே இருக்கின்றது. கோள் $A$ இன் சராசரி அடர்த்தி $d_A$ இற்குரிய ஒரு கோவையைப் புவியின் சராசரி அடர்த்தி $d_E$ இன் சார்பிற் பெறுக.


Download Marking Schemes at : www.freebooks.lk

**8.** (*a*) (i) $B$ இலுள்ள ஈர்ப்பு விசை = $B$ இலுள்ள மையநாட்ட விசை

$$\frac{GMm_B}{R_B^2} = \frac{m_B\, v_B^2}{R_B} \quad \ldots\ldots\ldots\ldots (01)$$

$$v_B = \sqrt{\frac{GM}{R_B}} \quad \ldots\ldots\ldots\ldots (01)$$

(ii) மண்டிலக் காலம், $T_B = 2\pi \frac{R_B}{v_B}$ ............ (01)

(iii) $$(T_B)^2 = \left(2\pi \frac{R_B}{v_B}\right)^2$$

$$M = \frac{4\,\pi^2}{G}\frac{R_B^3}{T_B^2} \quad \ldots\ldots\ldots\ldots (01)$$

(iv) $$M = \frac{4\times10}{6.7\times10^{-11}}\frac{(0.3\times1.5\times10^{11})^3}{(50\times24\times60\times60)^2}$$ (சரியான பிரதியீட்டிற்கு)............ (01)

($\pi^2$ இற்கு 10 இற்குப் பதிலாக $3.14^2$ ஐப் பாவித்தால் இப் புள்ளியை வழங்கவும்)

$$= \frac{4\times10}{6.7}\frac{(0.3\times1.5)^3}{(5\times24\times36)^2}\times 10^{38}$$

$= 2.92\times10^{30}$kg    [$(\mathbf{2.90 - 2.92})\times \mathbf{10^{30}}$] kg ............ (01)

($\pi$ ஆனது 3.14 என எடுத்தால், விடையானது[$(\mathbf{2.87 - 2.90})\times \mathbf{10^{30}}$] kg இக்கிடையில் இருக்கவேண்டும்)

(*b*) (i) மேலே பகுதி (iii) இலிருந்து, $M = \frac{4\,\pi^2}{G}\frac{R_B^3}{T_B^2}$,

இவ்வாறே $M = \frac{4\,\pi^2}{G}\frac{R_A^3}{T_A^2}$ ............ (01)

$\frac{R_A^3}{T_A^2} = \frac{R_B^3}{T_B^2}$ (**அல்லது** வேறு ஏதாவது சரியான வடிவம்)............ (01)

(ii) மேலே பகுதி (b)(i) இலிருந்து $R_A = \left(\frac{T_A}{T_B}\right)^{2/3} R_B$

$R_A = \left(\frac{300}{50}\right)^{2/3}\left(0.3\times1.5\times10^{11}\right)$ (சரியான பிரதியீட்டிற்கு)...... (01)

$R_A = 1.49\times10^{11}$m  [$(\mathbf{1.48 - 1.50})\times\mathbf{10^{11}}$] m ............ (01)

மாற்று விடை:

$R_A = \left(\frac{300}{50}\right)^{2/3}$ (0.3) AU (சரியான பிரதியீட்டிற்கு)...... **(01)**

$R_A = 0.99$ AU ($\mathbf{0.99 - 1.00}$) AU...................... **(01)**

Download Marking Schemes at : www.freebooks.lk

(c) (i) கோள் $A$ இன் மேற்பரப்பில் $m$ இன் மீதான ஈர்ப்புக் கவர்ச்சி,

$$mg_A = \frac{G\,m_A m}{r_A^2} \text{.....................(01)}$$

கோள் $A$ இல் ஈர்ப்பினாலான ஆர்முடுகள், $g_A = \frac{G\,m_A}{r_A^2}$

$$g_A = \frac{G(23\,m_E)}{(4.6\,r_E)^2} = \frac{23}{(4.6)^2}\frac{Gm_E}{(r_E)^2} = 1.09\frac{G\,m_E}{r_E^2} \text{.....................(01)}$$

(ii) $g_A = \frac{23}{(4.6)^2} g_E = 1.09 g_E \quad [(\mathbf{1.08 - 1.10})g_E]$ .....................(01)

(iii) இறங்கும் தொகுதியின் நிறை $= 100\, g_A = 100 \times 1.09 \times 10$ N

$$= 1.09 \times 10^3 \text{ N} \quad [(\mathbf{1.08 - 1.10}) \times \mathbf{10^3}] \text{ N.........(01)}$$

(iv) கோள் $A$ இன் சராசரி அடர்த்தி,

$$d_A = \frac{m_A}{\left(\frac{4\pi}{3}\right) r_A^3} = \frac{(23 m_E)}{\left(\frac{4\pi}{3}\right)(4.6 r_E)^3} = \frac{23}{4.6^3}\left(\frac{m_E}{\left(\frac{4\pi}{3}\right) r_E^3}\right)$$

$$= \frac{23}{4.6^3} d_E = 0.24 d_E \quad [(\mathbf{0.23 - 0.24}) d_E] \text{......(01)}$$

மொத்தம்: **15 புள்ளிகள்**

Download Marking Schemes at : www.freebooks.lk

**9. பகுதி (A) இற்கு அல்லது பகுதி (B) இற்கு மாத்திரம் விடை எழுதுக.**

(A) (*a*) ஒரு நேரோட்ட மோட்டரில் பின் மின்னியக்க விசை (மி. இ. வி.) எங்ஙனம் உண்டாக்கப்படுகின்றது என்பதைச் சுருக்கமாக விளக்குக. பின் மி. இ. வி. இன் (i) பருமனையும் (ii) திசையையும் துணியும் பௌதிகவியலிலான விதிகளின் பெயர்களை முறையே எழுதுக.

(*b*) ஒரு பற்றரியிலிருந்து ஓர் ஓட்டம் $I$ ஐ எடுக்கும்போது ஒரு நேரோட்ட மோட்டரினால் உண்டாக்கப்படும் பின் மி. இ. வி. $E$ இற்குரிய ஒரு கோவையை எழுதுக. மோட்டர்ச் சுருளின் அகத் தடை $r$ உம் பற்றரியின் முடிவிடை வோல்ற்றளவு $V$ உம் ஆகும்.

(c) $V = 80\text{ V}$, $r = 1.5\ \Omega$ எனின், மோட்டர் 4.0 A ஓட்டத்தை எடுத்துக்கொண்டு முழுச் சுமையுடன் தொழிற்படும்போது பின்வரும் கணியங்களைக் கணிக்க.

(i) மோட்டரினால் உண்டாக்கப்படும் பின் மி. இ. வி. $(E)$

(ii) மோட்டருக்கு வழங்கிய வலு

(iii) மோட்டரின் பொறிமுறை வலுப் பயப்பும் திறனும் (உராய்வு காரணமாக ஏற்பட்ட சக்தி இழப்புகளைப் புறக்கணிக்க).

(*d*) மேலே (c) இல் மோட்டருக்கு, $r$ இற்கும் ஓட்டம் (4.0 A) இற்கும் தரப்பட்டுள்ள பெறுமானங்கள் சுருள் அறை வெப்பநிலை 30 °C இல் இருக்கும்போது உள்ள பெறுமானங்களாகும் எனக் கொள்க. மோட்டரைப் பல மணித்தியாலங்களுக்கு ஓடவிட்ட பின்னர் வோல்ற்றளவு $V$ ஆனது 80 V இல் மாறாமல் இருக்கும்போது சுருளில் உள்ள ஓட்டம் 3.6 A இற்கு விழுந்துள்ளதெனக் காணப்பட்டது. சுருளின் புதிய வெப்பநிலையைக் கணிக்க. 0 °C இல் சுருளின் திரவியத்தின் தடையின் வெப்பநிலைக் குணகம் $0.004\ °C^{-1}$ ஆகும்.

(*e*) மின் மோட்டர் வாகனங்களில் வாகனங்களின் சில்லுகளைச் சுழலச் செய்வதற்குப் பற்றரிகளினால் இயக்கப்படும் நேரோட்ட மோட்டர்கள் பயன்படுத்தப்படுகின்றன. தடுப்புகளைப் பிரயோகிக்கும்போது அத்தகைய வாகனங்களில் உள்ள அதே மோட்டர் ஒரு நேரோட்டப் பிறப்பாக்கியாகத் தொழிற்படச் செய்யப்படுகின்றது. வாகனத்தின் இயக்கப்பாட்டுச் சக்தியில் ஒரு பகுதி அப்பிறப்பாக்கியை இயக்கப் பயன்படுத்தப்படுகின்றது. பின்னர் அதே வாகனத்தின் பற்றரியை மீள்வேற்றுவதற்குப் பிறப்பாக்கிப் பயப்பு பயன்படுத்தப்படுகின்றது.

(i) ஒரு நேரோட்ட மோட்டரை எங்ஙனம் ஒரு நேரோட்டப் பிறப்பாக்கியாகத் தொழிற்படுத்துவீர் ?

(ii) உருவில் உள்ள இரு வரிப்படங்களையும் உமது விடைத்தாளிற் பிரதிசெய்து, பற்றரியை ஏற்றுவதற்கு நேரோட்டப் பிறப்பாக்கிப் பயப்பை எங்ஙனம் தொடுப்பீரெனக் காட்டுக.




**9. (A)** (*a*) சுருளினூடான காந்தப் புலம்/பாய மாற்று வீதம் காரணமாக பின் மி.இ.வி. உண்டாக்கப்படும் ........................................**(01)**

(i) பரடேயின் விதி (ii) லென்ற்சின் விதி (**இரண்டும்** சரியாயின்) ......**(01)**

(மேலே கூறிய வடிவில் விதிகளை தெளிவாக பிரித்துக் **கூறாமல்** இருந்தால், **முதல் விடையை பருமனுக்குரிய** பதிலாக எடுக்க.)

(*b*) $E = V - Ir$ ........................................**(01)**

(*c*) $V = 80\text{ V}, r = 1.5\ \Omega, I = 4.0\text{ A}$

(i) $E = 80 - 4 \times 1.5$

$E = 74\text{ V}$........................................**(01)**

(ii) மோட்டருக்கு வழங்கிய வலு $= VI = 80 \times 4$ ........................**(01)**

$= 320\text{ W}$........................................**(01)**



Download Marking Schemes at : www.freebooks.lk

(iii) சுருளில் விரயமாக்கப்பட்ட வலு $= I^2 r = 16 \times 1.5$ ........................(01)

$= 24$ W

பொறிமுறை வலுப் பயப்பு $= VI - I^2 r = 320 - 24$ ....................(01)

$= 296$ W.................................................(01)

மாற்று விடை:

பொறிமுறை வலுப் பயப்பு $= EI$ ....................................(01)

$= 74 \times 4$ (சரியான பிரதியீட்டிற்கு)....(01)

$= 296$ W ..............................(01)

மோட்டரின் திறன் $= \frac{296}{320} = 0.925$ $[\mathbf{0.92 - 0.93}]$ **அல்லது**

$= 92.5\%$ $[\mathbf{92\% - 93\%}]$ ...........(01)

(*d*) $30\ ^0$C இல் தடை $= r_{30} = 1.5\ \Omega$

$\theta\ ^0$C இல் தடை $= r_\theta = \frac{V-E}{I_\theta} = \frac{80-74}{3.6} = \frac{6}{3.6} = 1.67\ \Omega$ ...............(01)

$$\left.\begin{array}{r} r_{30} = r_0(1 + 0.004 \times 30) \\ r_\theta = r_0(1 + 0.004 \times \theta) \end{array}\right\}$$ (ஏதாவது சரியான சமன்பாட்டிற்கு )........(01)

$$1.5 \times \frac{3.6}{6} = \frac{1 + 0.12}{1 + 0.004\theta}$$

$$\theta = \frac{0.22}{0.9 \times 0.004}$$

$\theta = 61.11\ ^0$C $[\mathbf{61.0 - 62.0}]\ ^0$C........(01)

(e) (i) பொறிமுறை விசையினால் மோட்டரின் சுருளை சுழற்ற ......................(01)

(ii)




...................(01)

மொத்தம்: **15 புள்ளிகள்**

Download Marking Schemes at : www.freebooks.lk

(B) (a) ஒரு *npn* திரான்சிற்றரின் $I_C, I_B, I_E$ ஆகியவற்றுக்கிடையே உள்ள தொடர்புடைமைக்குரிய கோவையை எழுதுக. எல்லாக் குறியீடுகளும் அவற்றின் வழக்கமான கருத்தை உடையன.

(b) உரு (1) இற் காட்டப்பட்டுள்ளவாறு தொடுக்கப்பட்ட *npn* திரான்சிற்றர் உயிர்ப்பு வகையில் (active mode) தொழிற்படுகின்றது. திரான்சிற்றரின் ஓட்ட நயம் 100 எனவும் அது முன்முகக் கோடலுற்றிருக்கும்போது அடிக்கும் காலிக்கும் குறுக்கே உள்ள வோல்ற்றளவு $V_{BE} = 0.7$ V எனவும் கொள்க.




(i) ஒரு சேகரிப்பான் வோல்ற்றளவு 5 V ஐ உண்டாக்குவதற்குத் தேவையான அடி ஓட்டம் $I_B$ ஐக் கணிக்க.

(ii) $R_1 = 12$ kΩ எனின், $R_2$ இன் பெறுமானத்தைக் கணிக்க (இக்கணிப்புக்கு $I_B$ புறக்கணிக்கத்தக்கதெனக் கொள்க).

(iii) உரு (1) இற் காட்டப்பட்டுள்ள தரப்பட்ட சுற்றை −10 V என்னும் ஒரு மறை வலு வழங்கல் வோல்ற்றளவுடன் தொழிற்படத்தக்கதாக மாற்றியமைக்க. A, B எனப் பெயரிடப்பட்ட புள்ளிகளையும் $R_1, R_2$, 10 kΩ ஆகியவற்றையும் பயன்படுத்தி உரிய விதத்தில் மாற்றியமைத்த சுற்றைச் சரியாக மீளப் பெயரிடுக. சேகரிப்பான் ஓட்டத்தின் திசையையும் $R_1, R_2$ ஆகியவற்றினூடாக ஓட்டத்தின் திசையையும் அம்புக்குறிகளுடன் காட்டுக.

(c) மேலே (b) (iii) இல் நீர் வரைந்துள்ள மாற்றியமைத்த சுற்றில் திரான்சிற்றரின் அடிக்கும் காலிக்கும் குறுக்கே ஓர் ஒளியிருவாயியைத் தொடுக்க வேண்டியுள்ளது.

(i) ஒரு சுற்றுடன் ஓர் ஒளியிருவாயியைத் தொடுத்தல். ஒளியிருவாயி புறமாற்றுக் கோடலுறுமாறு, மேற்கொள்ளப்படுகின்றது. ஒளியிருவாயியின் சுற்றுக் குறியீட்டைப் பயன்படுத்தி அதனை மாற்றியமைத்த சுற்றில் திரான்சிற்றரின் அடிக்கும் காலிக்கும் குறுக்கே சரியாக எங்ஙனம் தொடுப்பீரெனக் காட்டுக.

(ii) மாற்றியமைத்த சுற்றுடன் ஒளியிருவாயி சரியாகத் தொடுக்கப்படும்போது அடிக்கும் காலிக்கும் குறுக்கே உள்ள தடை கணிசமான அளவில் மாறுமா ? உமது விடையை விளக்குக.

(iii) குறுகிய காலநீட்சி உள்ள ஒரு செவ்வக ஒளித் துடிப்பு ஒளியிருவாயி மீது படும்போது

(1) சுற்றில் ஒளியிருவாயியினூடாக உள்ள ஓட்டத்தின் திசையை ஓர் அம்புக்குறியைப் பயன்படுத்திக் காட்டுக.

(2) ஒளித் துடிப்புக் காரணமாகக் காலி தொடர்பாக அடியில் தோற்றும் வோல்ற்றளவுத் துடிப்பின் அலை வடிவத்தையும் புவி தொடர்பாகச் சேகரிப்பானில் உள்ள வோல்ற்றளவுத் துடிப்பின் அலை வடிவத்தையும் சுற்றிலே உரிய இடங்களில் வரைக.

**9. (B)** (a) $I_E = I_B + I_C$ ..............................(01)

(b) (i) $V_C = 5$ V, $\beta = 100$, $V_{BE} = 0.7$ V

$$I_C = \frac{10-5}{10\times10^3} = \frac{5}{10\times10^3}$$ ..............................(01)

$$I_B = \frac{I_C}{\beta} = \frac{5\times10^{-4}}{100}$$ ..............................(01)

$I_B = 5 \times 10^{-6}$ A **அல்லது** (5 μA) .......(01)

(ii) $R_1 = 12$ kΩ (தரப்பட்டுள்ளது)

$$\frac{10\,R_2}{R_1+R_2} = 0.7$$ ..............................(01)

$$R_2 = \frac{0.7\times12\times10^3}{9.3}$$

$R_2 = 903.2\ \Omega$ **அல்லது** **[(903.0 − 903.5) Ω]** ..............(01)

Download Marking Schemes at : www.freebooks.lk

(iii)




அல்லது




சரியான வரைபடத்திற்கு ....................................................(01)

(இப்புள்ளியை வழங்கும்போது, -10 V முடிவிடத்தையும் புவியின் முடிவிடத்தையும் பார்க்க)

$R_1, R_2, A, B$ என்பவற்றை சரியாகக் குறிக்க ....................................(01)

(சுற்றில் $V_E = -10\text{ V}$, $V_A = -9.3\text{ V}$, இதனால் $V_{BE} = +0.7\text{ V}$, இது $R_1 > R_2$ ஆக இருக்கும்போது மாத்திரம் நிகழும் எனக் கவனிக்கவும். இவ் இரண்டாவது புள்ளியைக் கொடுப்பதற்கு முன்னர் சுற்றை அதற்கிணங்க சரிபார்க்கவும்)




அல்லது




$I_C$ இன் திசையை அம்புக்குறியால் குறிப்பதற்கு ................................(01)

$R_1$, $R_2$ இனூடாக ஓட்டத்தின் திசையை அம்புக்குறியால் குறிப்பதற்கு

..................................(01)

Download Marking Schemes at : www.freebooks.lk

(c)(i)




அல்லது




............................(01)

(இப்புள்ளியை வழங்குவதற்கு மாற்றியமைத்த சுற்று சரியானதொன்றாக இருத்தல் வேண்டும். ஒளியிருவாயியின் சந்தி புறமாற்றுக் கோடலுறுமாறு அடிக்கும் காலிக்கும் இடையில் இணைக்கப்பட்டுள்ளதா எனவும் சரிபார்க்க)

(ii) இல்லை

ஒளியிருவாயி புறமாற்றுக் கோடலுறுமாறு இணைக்கப்பட்டுள்ளதால் அதன் தடை $R_2$ (>> $R2$) உடன் ஒப்பிடும்போது மிகப் பெரியது.................(01)

ஒளியிருவாயியானது B-E சந்திக்குச் சமாந்தரமாக உள்ளது. எனவே, B-E சந்திக்குக் குறுக்கே பலித தடையை மாற்றாது.

Download Marking Schemes at : www.freebooks.lk

(iii)




(1) **ஓட்டத்தின் திசை:** ஓட்டமானது சாதாரணமான ஒரு இருவாயி நேர்முக கோடலுறுற்றிருக்கும்போது உள்ள திசைக்கு எதிர் திசையில் அம்புக்குறியை வரைவதற்கு ........................................................ **(01)**

(2) காட்டப்பட்டுள்ளவாறு காலி சார்பாக அடியில் செவ்வக வோல்ற்றளவுத் துடிப்பு தோன்றுவதற்கு........................................................ **(01)**

காட்டப்பட்டுள்ளவாறு புவி சார்பாக சேகரிப்பானில் செவ்வக வோல்ற்றளவுத் துடிப்பு ........................................................ **(01)**

**(புள்ளி கோடிட்ட பரப்புகளில் தரப்பட்ட வரைபடங்கள் புள்ளியிடும் பரீட்சகர்களுக்கான மேலதிக தகவல் ஆகும்.)**

| மொத்தம்: **15 புள்ளிகள்** |
|---|


Download Marking Schemes at : www.freebooks.lk

**10. பகுதி (A) இற்கு அல்லது பகுதி (B) இற்கு மாத்திரம் விடை எழுதுக.**

**(A)** ஒரு குறித்த வீடு சமையலறையிலும் குளியலறையிலும் கழுவும் நோக்கங்களுக்காக ஒரு மணித்தியாலத்திற்கு 50 °C இல் உள்ள வெந்நீரின் 100 kg ஐ நுகருகின்றது. ஒரு மின் கொதிகலத்தினால் 70 °C இல் பிறப்பிக்கப்படும் வெந்நீர் கொதிகலத்திற்கு வெளியே 30 °C இல் உள்ள நீருடன் கலக்கப்பட்டு 50 °C இல் உள்ள நீர் உண்டாக்கப்படுகின்றது.

நீரின் தன்வெப்பக் கொள்ளளவும் நீரின் அடர்த்தியும் முறையே 4200 J kg$^{-1}$ K$^{-1}$ எனவும் 1000 kg m$^{-3}$ எனவும் எடுக்க. எல்லாக் கணிப்புகளுக்கும் சுற்றாடலிற்கான வெப்ப இழப்பும் கொதிகலத்தின் வெப்பக் கொள்ளளவும் புறக்கணிக்கத்தக்கவையெனக் கொள்க.

(*a*) 50 °C இல் உள்ள நீரின் 100 kg ஐ உண்டாக்குவதற்கு 70 °C இல் கொதிகலத்திலிருந்து தேவைப்படும் வெந்நீரின் திணிவைக் கணிக்க.

(*b*) கொதிகலத்திலிருந்து எடுக்கப்படும் மேலே (*a*) இல் கணிக்கப்பட்ட 70 °C இலான வெந்நீரின் அளவு 30 °C இல் உள்ள நீரின் அதே அளவினால் மீளநிரப்பப்பட்டு, கொதிகலத்தில் உள்ள நீரின் வெப்பநிலை 66 °C இலும் குறையாமல் இருக்குமாறு கொதிகலம் வடிவமைக்கப்பட்டுள்ளது. இந்நிபந்தனையைப் பூர்த்திசெய்வதற்குக் கொதிகலத்தில் உள்ள நீரின் குறைந்தபட்சக் கொள்ளளவை (i) கிலோகிராமிலும் (ii) லீற்றரிலும் கணிக்க.

(*c*) நாளின் தொடக்கத்திலே கொதிகலத்தில் மேலே (*b*) இல் கொள்ளளவாகக் கணிக்கப்பட்ட நீரின் அதே அளவு திணிவு நிரப்பப்பட்டு, ஒரு மின் வெப்பமாக்கியைப் பயன்படுத்தி 30 °C இலிருந்து 70 °C இற்கு ஒரு மாறா வீதத்தில் வெப்பமாக்கப்பட்டது. வெப்பமாக்கல் ஒரு மணித்தியாலத்தில் நிறைவேற்றப்பட வேண்டுமெனின், இந்நோக்கத்திற்குத் தேவைப்படும் வெப்பமாக்கியின் வலுவைக் கணிக்க.

(*d*) மேலே (*c*) இற்கேற்பத் தொடக்க வெப்பமாக்கலைச் செய்த பின்னர் மேலே (*a*) இல் உள்ள தேவைக்கேற்பக் கொதிகலத்திலிருந்து எடுக்கப்பட்ட கொதிநீரை ஈடுசெய்வதற்காக 30 °C இல் உள்ள நீரை மீளநிரப்பல் தொடர்ச்சியாக நடைபெறுகின்றது. ஒரு மணித்தியால காலம் முழுவதும் கொதிகலத்தின் சராசரி வெப்பநிலையை 70 °C இல் பேணுவதற்கு வேறொரு சிறிய மின் வெப்பமாக்கி வெப்பத்தை வழங்குமாறு கொதிகலம் வடிவமைக்கப்பட்டுள்ளது. தேவைப்படும் சிறிய வெப்பமாக்கியின் வலுவைக் கணிக்க.

**10. (A)** (*a*) வெந்நீரின் அளவு $= m_H$ kg, என்க

30 $^0$C இல் குளிர் நீரின் அளவு $= m_C$ kg,

50 $^0$C இல் நீரின் அளவு $m = 100$ kg.




70 $^0$C இல் வெந்நீரினால் இழக்கப்பட்ட வெப்பத்தின் அளவு,

$$Q_H = m_H\, C_w\, (70 - 50)$$

30 $^0$C இல் குளிர் நீரினால் பெற்ற வெப்பத்தின் அளவு,

$$Q_C = m_C\, C_w\, (50 - 30)$$

**(இரண்டும் சரியாயின்)** ................................................................ **(01)**

$$Q_H = Q_C$$

$m_H\, C_w\, (70 - 50) = m_C\, C_w\, (50 - 30)$ ........................................ **(01)**

$m_H = 100 - m_H$ ($m_C$ இற்குப் பிரதியிட) ........................................ **(01)**

$m_H = 50$ kg ................................................................ **(01)**

**மாற்று முறை**

கலவையின் வெப்பநிலையானது இரு வெப்பநிலைக்கும் நடுவில் இருப்பதனால் ...(01)

தேவையான வெந்நீரின் திணிவு குளிர் நீரின் திணிவிற்குச் சமனாகும். ............(01)

$$m_H = \frac{100}{2} \quad ...........................(01)$$

$$= 50\ \text{kg} \quad ...........................(01)$$

($b$) கொதிகலத்தின் குறைந்தபட்சக் கொள்ளளவு $= M$ kg என்க

70 $^0$C இல் வெந்நீரினால் இழக்கப்பட்ட வெப்பம,

$$\acute{Q}_H = (M - m_H)\, C_w\, (70 - 66) \quad ...........................(01)$$

30 $^0$C இல் குளிர் நீரினால் பெற்ற வெப்பம்,

$$\acute{Q}_C = m_C\, C_w\, (66 - 30) \quad ...........................(01)$$

$$\acute{Q}_H = \acute{Q}_C$$

$$(M - m_H)C_w\,(70 - 66) = m_C\, C_w\,(66 - 30) \quad ..........(01)$$

(கோவையை சமன் செய்ய)

$M$ ஐ குறைந்தபட்சக் கொள்ளளவு என அடையாளம் காண்பதற்கு ......(01)

$$(M - m_H) \times 4 = m_C \times 36$$

$$M = 10\, m_H$$

(i) $M$ கிலோகிராமில் $= 500$ kg ...........................(01)

(ii) கொள்ளளவு லீட்டரில் $= \frac{500\ \text{kg}}{10^3\ \text{kg m}^{-3}} \times 1000 = 500$ லீட்டர்..........(01)

($c$) வெப்பமாக்கியின் வலு $P = \frac{M \times C_W \times (\theta_H - \theta_C)}{t}$ ...........................(01)

$$P = \frac{500 \times 4200 \times (70 - 30)}{60 \times 60} \quad \text{(சரியான பிரதியீட்டிற்கு)} ........... (01)$$

$$P = 2.33 \times 10^4\ \text{W} \quad [(\mathbf{2.33 - 2.34}) \times \mathbf{10^4}]\ \text{W} .......... (01)$$

($d$) சிறிய வெப்பமாக்கியின் வலு,

$$\acute{P} = \frac{50 \times 4200 \times (70 - 30)}{60 \times 60} \quad \text{(சரியான பிரதியீட்டிற்கு)} ........(01)$$

$$\acute{P} = 2.33 \times 10^3\ \text{W} \quad [(\mathbf{2.33 - 2.34}) \times \mathbf{10^3}]\ \text{W} ......(01)$$



Download Marking Schemes at : www.freebooks.lk

**மாற்று விடை:**

சிறிய வெப்பமாக்கியின் வலு $\acute{P} = \frac{500 \times 4200 \times (70-66)}{60 \times 60}$ ................(01)

(சரியான பிரதியீட்டிற்கு)

$\acute{P} = 2.33 \times 10^3$ W $[(\mathbf{2.33 - 2.34}) \times \mathbf{10^3}]$ W........(01)

மொத்தம்: **15 புள்ளிகள்**

Download Marking Schemes at : www.freebooks.lk

8) (a) (i) உரு (1) இல் தரப்பட்டுள்ள வரிப்படம் ஓர் X –கதிர்க் குழாயின் ஒரு பருமட்படிப் படமாகும். A, B எனக் குறிக்கப்பட்டுள்ள பகுதிகளைப் பெயரிடுக.

(ii) D எனக் குறிக்கப்பட்ட பகுதியைப் பெயரிட்டு, அதனைப் பயன்படுத்தும் நோக்கத்தை விளக்குக.

(iii) C எனக் குறிக்கப்பட்ட பகுதியைப் பெயரிட்டு, அதனைப் பயன்படுத்தும் நோக்கத்தை விளக்குக.

(iv) X –கதிர்கள் உண்டாக்கப்படும் விதத்தை விளக்குக.

(v) ஒரு வெறிதாக்கப்பட்ட குழாயைப் பயன்படுத்துவதற்கான ஒரு காரணத்தைத் தருக.




உரு (1)

(b) ஓர் X –கதிர்க் குழாயின் வழங்கல் வோல்ற்றளவு 100 000 V ஆகும்.

(i) A ஐ அடையும் ஓர் இலத்திரனின் உயர்ந்தபட்சச் சக்தியை keV அலகுகளிற் கணிக்க.

(ii) மேலே (b) (i) இற் கணிக்கப்பட்ட உயர்ந்தபட்சச் சக்தியைக் காவும் ஓர் இலத்திரன் அதன் சக்தியில் அரைவாசியைச் செலவிட்டு ஓர் X –கதிர்ப் போட்டனை உண்டாக்குவதுடன் எஞ்சியுள்ள சக்தி முழுமையாக உறிஞ்சப்படுகின்றது. உறிஞ்சப்பட்ட சக்திக்கு என்ன நடைபெறுகின்றதென விளக்குக.

(iii) மேலே (b) (ii) இல் உண்டாக்கப்பட்ட X –கதிர்ப் போட்டனின் அலைநீளத்தைக் கணிக்க.

$[h = 6.6 \times 10^{-34}\ \mathrm{J\ s},\ c = 3 \times 10^{8}\ \mathrm{m\ s^{-1}},\ 1\ \mathrm{eV} = 1.6 \times 10^{-19}\ \mathrm{J}]$

(c) $\gamma$ –கதிர்கள் ஒரு திரவியத்தினூடாகச் செல்லும்போது திரவியத்தினால் $\gamma$ –கதிர்ப் போட்டன்களின் ஒரு குறித்த பின்னம் உறிஞ்சப்படுகின்றது. உரு (2) இற் காட்டப்பட்டுள்ளவாறு தடிப்பு $t$ ஐ உடைய ஒரு திரவியத் தகட்டிற்குச் செங்குத்தாகப் படும் செறிவு $I_0$ ஐ உடைய ஒரு $\gamma$ –கதிர்க் கற்றையைக் கருதுக. உறிஞ்சலின் விளைவாக $\gamma$ –கதிர்க் கற்றையின் ஊடுகடத்தப்பட்ட செறிவு குறைகின்றது. அது $I$ இனாற் குறிக்கப்பட்டுள்ளது.




உரு (2)

$I_0$ இற்கும் $I$ இற்கும் இடையிலான தொடர்புடைமை $\log\left(\frac{I_0}{I}\right) = 0.434\mu t$ இனால் தரப்படும்; இங்கு $\mu$ ஒரு குறிப்பிட்ட $\gamma$ –கதிர்ச் சக்திக்குத் திரவியத்திற்கான ஒரு மாறிலியாகும். கீழே தரப்பட்டுள்ள எல்லாத் தரவுகளும் 2 MeV $\gamma$ –கதிர்களுக்காகும். 2 MeV $\gamma$ –கதிர்களுக்கு ஈயத்துக்கான $\mu$ இன் பெறுமானம் $51.8\ \mathrm{m^{-1}}$ என எடுக்க.

(i) மேற்குறித்த $\gamma$ –கதிர்களின் செறிவை அரைவாசியாகக் குறைப்பதற்குத் தேவைப்படும் ஈயத்தின் தடிப்பைக் கணிக்க.

(ii) ஒரு கதிர்ப்புத் தொழிலாளருக்கு அனுமதிக்கத்தக்க உயர்ந்தபட்ச வருடாந்த ஊட்டு (dose) 20 mSv ஆகும். ஒருவர் மீது செறிவு $10^{10}\ \mathrm{m^{-2}\ s^{-1}}$ ஐ உடைய மேற்குறித்த $\gamma$ -கதிர்க் கற்றை படும்போது கிடைக்கும் வருடாந்த ஊட்டு $2.5 \times 10^{6}$ mSv ஆகும். அனுமதிக்கத்தக்க உயர்ந்தபட்ச ஊட்டு எல்லையை மீறாமல் ஒரு கதிர்ப்புத் தொழிலாளர் மீது படத்தக்க மேற்குறித்த $\gamma$ -கதிர்க் கற்றையின் உயர்ந்தபட்சச் செறிவைத் துணிக.

(iii) நோயாளிகளுக்குச் சிகிச்சை அளிப்பதற்காக ஓர் 2 MeV $\gamma$ -கதிர் முதல் நிறுவப்பட்டுள்ள ஒரு மருத்துவமனையில் இருக்கும் ஒரு கதிர்ப்புச் சிகிச்சை அறையைக் கருதுக. கதிர்ப்புத் தொழிலாளர்கள் அடுத்துள்ள அறையில் பணியாற்றுகின்றனர். ஓர் ஈயச் சுவரினால் இரு அறைகளும் வேறாக்கப்பட்டுள்ளன. முதலில் ஒரு கதிர்ப்புக் கசிவு ஏற்படும்போது ஈயச் சுவருக்குச் செவ்வனாகப் படும் $\gamma$ -கதிர்களின் உயர்ந்தபட்சச் செறிவு $2.56 \times 10^{6}\ \mathrm{m^{-2}s^{-1}}$ ஆகும். கதிர்ப்புத் தொழிலாளர்கள் தமது அறையில் பாதுகாப்பாகப் பணியாற்றுவதற்குத் தேவைப்படும் ஈயச் சுவரின் குறைந்தபட்சத் தடிப்பைத் துணிக.

Download Marking Schemes at : www.freebooks.lk

**10. (B)** $(a)$ (i) $A$- அனோட்டு / இலக்கு
$B$- கதோட்டு / இழை / வெப்பமாக்கி $A$, B **இரண்டும்** சரியாயின்) .......**(01)**

(ii) D - இழைக்கான வலு வழங்கி / வெப்பமாக்கி
**நோக்கம்** - வெப்பவயன் காலல் மூலமாக இலத்திரன்களை உண்டாக்க.
(**இரண்டும்** சரியாயின்)..................**(01)**

(iii) C – உயர் வோல்ற்றளவு (நே.ஓ) வலு வழங்கி
**நோக்கம்** - கதோட்டிலிருந்து அநோட்டிற்கு இலத்திரன்களை ஆர்முடுக்க
**அல்லது**
இலத்திரன்களின் சக்தியைக் கூட்டுவதற்கு
(**இரண்டும்** சரியாயின்)....................**(01)**

(iv) ஆர்முடுக்கிய / சக்திமிக்க இலத்திரன்கள் அனோட்டை / இலக்கை அடிக்கும்போது X-கதிர்கள் உண்டாக்கப்படுகறது. ........................**(01)**

(v) வளி மூலக்கூறுகளுடன் மோதாமல் / அவற்றின் சக்தியைக் குறைக்காமல் இலத்திரன்கள் கதோட்டிலிருந்து அநோட்டிற்குப் பயணிக்கும்
**அல்லது**
X-கதிர்கள் உற்பத்தியின் திறனை அதிகரிக்க.
..............................**(01)**
(மேலும், சரியான வாதங்களுடன் எதிர்மறை பதில்களுக்கு இப்புள்ளியை வழங்கவும்)

$(b)$ (i) உயர்ந்தபட்ச இயக்கப்பாட்டுச் சக்தி, $E = eV = e(100\ 000\ \text{V})$

$E = 100\ (\text{keV})$.......................................**(01)**

(ii) வெப்பமாக விரயமாகும் **அல்லது** அனோட்டு/ இலக்கை வெப்பமாக்கும்
.....................................**(01)**

(iii) $E' = \frac{hc}{\lambda}$ (ஏதாவது சரியான வடிவத்திற்கு) **அல்லது**

$\lambda = \frac{6.6\times10^{-34}\times3\times10^{8}}{50\times10^{3}\times1.6\times10^{-19}}$ ..........................**(01)**

$\lambda = 2.48 \times 10^{-11}\ \text{m}$ $[(\mathbf{2.47 - 2.48}) \times \mathbf{10^{-11}}]\text{m}$............**(01)**


Download Marking Schemes at : www.freebooks.lk

(c) (i) $I = \frac{I_0}{2}$ ............................................................(01)

$\log\left(\frac{I_0}{I_0/2}\right) = 0.434(51.8)t$ (சரியான பிரதியீட்டிற்கு)........................(01)

$t = \frac{\log(2)}{0.434\times51.8}$

$t = 1.339 \times 10^{-2}$ m [$(\mathbf{1.33 - 1.34}) \times \mathbf{10^{-2}}$]m....(01)

(ii) கற்றை செறிவு $= \frac{10^{10}\ \text{m}^{-2}\ \text{s}^{-1}}{2.5\times10^{6}\ \text{mSV}} \times 20\ \text{mSv}$

$= 8 \times 10^{4}\ \text{m}^{-2}\text{s}^{-1}$ ............................................(01)

(iii) $\log\left(\frac{2.56\times10^{6}}{8\times10^{4}}\right) = 0.434(51.8)t'$ (சரியான பிரதியீட்டிற்கு)..............(01)

$t' = \frac{\log(32)}{0.434\times51.8} = \frac{\log(2^5)}{0.434\times51.8} = 5\left[\frac{\log(2)}{0.434\times51.8}\right] = 5t$

$t' = 6.70 \times 10^{-2}$ m [$(\mathbf{6.69 - 6.70}) \times \mathbf{10^{-2}}$]m......................(01)

மாற்று முறை : $\frac{I_0}{I} = \frac{2.56\times10^{6}}{8\times10^{4}} = 32 \rightarrow I = \frac{I_0}{32}$..................(01)




மேலுள்ள வாதத்தை பாவிக்க

$t' = 5t$

$= 6.70 \times 10^{-2}$ m [$(\mathbf{6.69 - 6.70}) \times \mathbf{10^{-2}}$]m......................(01)

மொத்தம்: **15 புள்ளிகள்**

Download Marking Schemes at : www.freebooks.lk

